உ

குருவே துணை

# சீகாழி தோத்திரப் பாமாலைத் திரட்டு

தாடாளன் - சிவன் - அம்மை - திருஞானசம்பந்தர்

அருள்நெறிச் சங்க வெளியீடு – 5



நூல் ஆசிரியர் : மகான் - வண்ணச் சரபம்

திருப்புகழ் சுவாமிகள், முருகதாச சுவாமிகள் என வழங்கும்

**அருள்மிகு தண்டபாணி சுவாமிகள்**

திருவாமாத்தூர்.

உ

குருவே துணை



# சீகாழி தோத்திரப் பாமாலைத் திரட்டு




*நூல் ஆசிரியர் :*

மகான் - வண்ணச் சரபம்

திருப்புகழ் சுவாமிகள், முருகதாச சுவாமிகள்

என வழங்கும்

**அருள்மிகு தண்டபாணி சுவாமிகள்**

*திருவாமாத்தூர்.*



*அருள்நெறிச் சங்க வெளியீடு - 5*

நூல் வெளியீட்டு நாள் :

8—8—77

ஓம்

# முன்னுரை

சீகாழி என்ற ஊர் விழுப்புரம் - மாயவரம் இருப்புப்பாதையில் சீர்காழி புகைவண்டி நிலையத்திலிருந்து கிழக்காக ¾ கல் தொலைவில் உள்ளது. சிதம்பரத்திலிருந்து, வைத்தீஸ்வரன்கோயில் போகும் சாலையில் 12 கல் தொலைவு தெற்கே உள்ளது. பேருந்துகள் இவ்வூர் வழியாக அடுத்தடுத்துச் செல்கின்றன.

காவிரி ஆற்றின் வடகரையில் உள்ள பாடல் பெற்ற பதிகளில், இது 14ஆவது. இவ்வூருக்கு பிரம்மபுரம், புகலி, வெங்குரு, வேணுபுரம், தோணிபுரம், பூந்தராய், புறவம், சண்பை, ஸ்ரீகாளிபுரம், கொச்சைவயம், கழுமலம், சிரபுரம் என பனிரெண்டு பெயர்கள் உள்ளன. திருஞானசம்பந்தர், மதுரையில் பாண்டிய மன்னனுக்கு விடைகூறிய, "பிரமனூர்" என்று தொடங்கும் தம் தேவாரப் பதிகத்திலும், வழிமொழித் திருவிராகம், திருஏகபாதம், திருமாலை மாற்று, திருக்கோமுத்திரி, திருஎழுகூற்றிருக்கை முதலிய தேவாரங்களிலும் இவ்வூர்ப் பெயர்களை வரிசைப்படுத்தி போற்றியுள்ளார். பெயர்க்காரணங்களை, "எரியார்மழு" என்று தொடங்கும் பல்பெயர்ப்பத்து என்ற பதிகத்தில், விளக்கியுள்ளார். இப்பன்னிரண்டு பெயர்களும் பன்னிருயுகத்தில் வழங்கின வாகப் பட்டினத்தடிகள், திருக்கழுமல மும்மணிக்கோவையுள் "வசையில் காட்சி" என்னும் செய்யுளில் உணர்த்தியுள்ளார். இவையன்றி சங்கநிதிபரம், பதுமநிதி-புரம், சிவாசாரியபுரம், பராசாக்ஷேத்திரம், புனர்ஜென்மபுரம், கிரிபுரம், உமா பதிபுரம், சீவன்முத்திபுரம், நீலகண்டவெற்பு, மாலைமாற்றுப்பதி, எழுகூற்-றிருக்கைப்பதி, இலிங்காடவி, குய்யகாசி, மூலாதார க்ஷேத்திரம் என்னும் பதினான்கு பெயர்களும் உள்ளனவாகத் தலபுராணம் தெரிவிக்கும்.

இவ்வூரில் தோன்றிய திருஞானசம்பந்தப் பிள்ளையார் பிறந்த வீடு இரட்டைத் தெருவில் இன்றும் காணலாம். அவர் தந்தை பூசை செய்துவந்த கோயிலும் பக்கத்தில் உள்ளது. திருநாவுக்கரசு நாயனார், பிள்ளையாரது பெருமைகேட்டு, இங்கு வந்து நட்புகொண்டார். சுந்தரமூர்த்தி நாயனார், பிள்ளையார் தோன்றிய பதியை மிதிக்க அஞ்சி, நகர்ப்புறத்தே நின்று பாடி, அங்கே, இறைவர் தோன்ற, காட்சி பெற்றார். திருநீலகண்டயாழ்ப்பாண நாயனார் இங்கு வந்து பிள்ளையாரை வணங்கி, அவரது பதிகங்களை யாழிலிட்டு வாசித்து, அவருடன் இருக்கும் பேறு பெற்றார். மாணிக்கவாசகர் இங்கு வந்து "உம்பர்கட்கு அரசே" என்று தொடங்கும் பிடித்த பத்து (திருவாசகம்) அருளியுள்ளார். பட்டினத்து அடிகள், பதினொராந் திருமுறையில் உள்ள, திருக்கழுமல மும்மணிக்கோவை பாடியுள்ளார். நம்பியாண்டார் நம்பிகள் சம்பந்தரைப் பற்றிய நூல் ஒன்றையும், இவ்வூரில் பிறந்த அருணாசலக்கவிராயர், இவ்வூருக்குத் தலபுராணத்தையும், திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம்

பிள்ளை "சீர்காழிக்கோவை"யையும் இயற்றியுள்ளனர். இவ்வூரில் சமயக்குரவர் மூவரும் 71 தேவாரப்பதிகங்கள் பாடியுள்ளனர். அருணகிரிநாதர் வந்து இவ் வூர் முருகன் மீது 14 திருப்புகழ் பாடியுள்ளனர். அறுபத்து மூவரில் ஒருவரான கணநாத நாயனுர் மற்றும் பல சான்ருேர்கள் இங்கு தோன்றியுள்ளனர்.

இத்தலத்திற்கு 47 கல்வெட்டுக்கள் உள்ளன. வீரராஜேந்திரன் (கி. பி. 1055 — 1070) முதலிய அரசர்கள் தாங்கள் வழங்கிய அறக் கட்டளைகளைக் குறிப்பிட்டுள்ளனர். திருஞானசம்பந்தர் கோயிலில் அவர் வடிவத்தை மூன்ருங் குலோத்துங்கனுடைய (கி. பி. 1178) அடுக்களைப் பெண்டு களில் மூத்தவள் இராஜவிச்சாதரி எழுந்தருளச்செய்தது; பொத்தப்பிச்சோழன் விரபாண்டியனை வென்று, அங்கிருந்து வெற்றிப் பரிசாகக் கூத்தப்பெருமானைக் கொண்டுவந்து கொடுத்தது; கல்வெட்டுக்களால் அறியப்படும் செய்திகளில் சில.

இவ்வூரில் பிரமபுரேசர் என்ற இலிங்கமாகிய திருமேனியும், (அம்மை - திருநிலைநாயகி), கட்டுமலையில் தோணியப்பர் (பெரியநாயகர் அம்மை பெரியநாயகி) என்ற குருவாகிய திருமேனியும், ஷை கட்டுமலையின் தென்முகத்தில் சட்டைநாதர் என்ற சங்கமாகிய திருமேனியுமாக, மூவகைத் திருமேனிகளுள்ளும் சிவபெருமான் விளங்குகிருர். சுவாமி, அம்மன் கோயில் களுக்கு இடையில் திருஞானசம்பந்தருக்குத் தனிக்கோயில் உண்டு. அப்படி இருப்பது சோமாஸ்கந்தர் நிலையை நினைவுப்படுத்துகிறது. சட்டைநாதர் "ஆபத்துத் தாரணர்" என்ற பெயருடன் வீற்றிருத்தல் இவ்வூர் சிறப்புகளில் ஒன்று. இரணியனைச் சங்கரித்த நரசிம்மத்தைத் தடிந்து அதன் தோலைச் சட்டை யாக அணிந்தவர். வாமனரைத் தடிந்து அவரது முதுகெலும்பைத் தண்டாக ஆக்கிய படைகொண்டவர். வெள்ளிக்கிழமை நள்ளிரவில் புனுகு சாத்தப்பட்டு சிறப்பு வழிபாடு பெறுகிருர். பைரவர் எட்டு கலைகளாய் தோன்றி விளங்கு கிருர். எண்மரும் தெற்குப் பிரகாரத்தில் வலம்புர மண்டபத்தில் யோகநிலையில் காட்சி தருகின்றனர்.

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனத்தின் ஆட்சியில் உள்ள இக் கோயிலில் ஆறு கால பூசை உண்டு. சித்திரைப் பெருவிழா இரண்டாம் நாள் நிகழும் திருமுலைப்பால் அளிக்கும் விழா மிகவும் சிறப்பு வாய்ந்தது. ஷை ஆதீனம் வெளியிட்ட இவ்வூர் தலவரலாறு இக்கோயிலில் விற்கப்படுகிறது.

இந்த ஊர், திருமாலுக்குரிய 108 திருப்பதிகளில் ஒன்று. இங்கு திருக்காழிச்சீராம விண்நகரம் என்னும் பெயர்பெற்ற கோயிலில் உள்ள திரிவிக்ரமப்பெருமாள் தாடாளன் என அழைக்கப்படுகிருர். திருமங்கை ஆழ்வாரால் மங்களாசாசனம் செய்யப்பெற்றவர். நாலாயிரத்திவ்யபிரபந்தம் பெரிய திருமொழி, மூன்ரும் பத்து, நான்காம் பதிகம் தாடாளனைப் பற்றியது.

திருஞானசம்பந்தர் பொற்றுளம் பெற்றத் தலமான கோலக்கா சீர்காழிக்கு மேற்கு 1 கல் தொலைவில் உள்ளது. வண்டி வசதி உண்டு. இத்தகையச் சிறப்பு வாய்ந்த சீர்காழியில் கோயில்கொண்ட தாடாளன் சிவன், அம்பிகை, திருஞானசம்பந்தர் ஆகியவர்களைப்பற்றி வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் பாடியுள்ளனர். அந்தப் பதிகங்கள் சீகாழி தோத்திரப் பாமாலைத் திரட்டு என்ற பெயரில் இப்போது வெளியிடப்படுகின்றன.

தண்டபாணி சுவாமிகள், திருநெல்வேலியில் 28—11—1838ல் தோன்றி, திருவாமாத்தூரில் 5—7—1898ல் சமாதி கொண்டருளினர். திருவாமாத்தூர், மூவர் பாடல் பெற்ற சிவத்தலம். விழுப்புரம் அருகில் உள்ளது. வடலூர் வள்ளலார் இராமலிங்க சுவாமிகளுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்த தண்டபாணி சுவாமிகள் சமரச வேடம் கொண்டு பல ஊர்களுக்குச் சென்று சமய பேதமற்ற நிலையில் சூரியன், சிவன், அம்பிகை, திருமால், கணபதி, முருகன் என்ற அறு சமயக் கடவுளர் மீதும் அளவற்ற பாடல்கள் பாடியுள்ளனர். இலக்கண நூல்களும் புதிதாக இயற்றியுள்ளனர். தாமே அழித்தது போக பனை ஓலைகளில் தம் கையால் எழுதப்பட்ட ஐம்பது ஆயிரத்திற்கும், அதிகமான பாடல்கள், இவரால் நிறுவப்பெற்ற கௌமார மடாலய நூல்நிலையத்தில் இவரது மரபினரால் பாதுகாக்கப்பெற்று, அச்சிட விரும்பும் அன்பர்கட்கு எழுதி வழங்கப்படுகின்றன.

இப்போது வெளிவரும் இப்பதிகங்களைப் பல வேலைகளுக்கு இடையில், எவ்வித நிபந்தனையுமின்றி, ஷை சுவாமிகள் பெயரர் தவத்திரு முருகதாச சுாவமிகள் தம், அருமை மகன் தமிழாசிரியர் புலவர் திரு *தி. மு. சங்கரலிங்கம்* அவர்கள் துணைகொண்டு ஓலையிலிருந்து எழுதி குறிப்புரையுடன் அனுப்பி யுள்ளனர்.

அருள்நெறிச் சங்கத்தின் ஐந்தாவது வெளியீடாக இந்நூல் வெளி வருவதற்குத் துணையாக இருக்கும் எல்லா அன்பர்கட்கும், தோன்றாத் துணை யாக விளங்கும் திருவருட்கும் இச்சங்கம் நன்றி தெரிவித்து மகிழ்கிறது.

*16, கன்வேயர் வீதி,*
*வட்டம்-24, நெய்வேலி-1.*
*8—8—77.*

செ. இராதாகிருஷ்ணன்,
B. E., (Hons.) M. I. E.,
*தலைவர், அருள்நெறிச்சங்கம்.*

ஸ்ரீமந் நாராயணாய நம :

# சீகாழி-தாடாளப் பெருமாள் பதிகம்

காப்பு. வெண்பா

காழிநகர்த் தாடாளா! கண்இமையா வானவருக்(கு)
ஆழி கடைந்(து)இன் அமுதிட்டாய் — பாழில்
இரந்தலையா(து) யான்விரும்பும் ஏமம்நல்கு மாறுன்
உரந்தழைக்கும் மங்கைக்(கு) உரை.

நூல். எண் சீர்விருத்தங்கள்

1. என்னதுபா டலின்விருப்பம் மிஞ்சி நீயிங்(கு)
இயற்றியதோர் ஆடலைஇவ் இகத்துள் ளாரும்
பொன்னகர்வாழ் நரும் அறிந்து புகல்கைக் கான
புதுமையொன்றிப் பொழுதேநீ புரிய வேண்டும்
பன்னகக்கோ வாயபெரும் பாயல் மீது
பாற்கடலிற் றுயில்கூரும் பைம்பொற் குன்றே!
கன்னல்வில்லா னெடுபிரமன் றனைமுன் ஈன்ற
காழிநகர்த் தாடாளா! கருணை மாலே

குறிப்பு: வாழ்நர் - தேவர்கள். பன்னகக்கோ-பாம்பரசனான ஆதிசேடன். பைம்பொற்குன்று - பச்சைமலை. கன்னல்வில்லான் - கரும்பைவில்லாக வுடைய மன்மதன். தாடாளன் - முயற்சியுடையவன். அது எல்லாவுயிர் கட்கும் உணவளிக்கும் பண்பு. 1

2. செங்கைகுவித்(து) உன்னையன்றிப் பிறரைப் போற்றுச்
சீரியநன் னிலையில்லேன்; சிகிநேர் சாயல்
மங்கைமால் ஆதியஏ டணைமுன் றெய்தி
வாடுகின்றேன் எனைவிழைந்த வாறுஎன் கொல்லோ
சங்கையில்மெய்ப் புகழ்புனைந்த முகுந்தா விண்ணோர்
தலைவன்உய்யச் சிற்றரசும் தரித்தாய்! தண்ணம்
கங்கையினைப் பயந்தவியன் கமலத் தாளா
காழிநகர்த் தாடாளா! கருணை மாலே

குறிப்பு: சிகி - மயில். ஏடணை - மூன்றாசை. சங்கை - அளவு. சிற்றரசு- உபேந்திரனாகியிருந்தது. தண்அம் - குளிர்ச்சி அழகு என்பவை. 2

3. நல்லிதயப் பெருஞ்செல்வர் இல்லா நாளில்
நறுந்தமிழும் கலியும்நல்கி நலித்தாய் நொந்தேன்
அல்லியங்கே ணியிற்கொடுத்த சீட்டுப் போல்பொன்
அளித்தேனும் கடன்துயர்தீர்த்(து) ஆண்டால் நன்றும்
வில்லிருந்த கைக்கரிய முகில்போற் சென்று
வேலைவற்றக் கணைசொரிந்த விகிர்தா! மேனாள்
கல்லிநெடும் பார்புரந்(து)ஓர் தகுவற் செற்றாய்
காழிநகர்த் தாடாளா! கருணை மாலே

*குறிப்பு: நறுந்தமிழ் - இனிய தமிழ்ப்பாட்டியற்றும்பேறு. கலி - கீழ்மை யுற்றவறுமை. திருவல்லிக்கேணியில், சுவாமிகள் - எழுகூற்றிருக்கைப் பாடியரங்கேற்றினர். திருமால் அதற்காக எழுநூறு பொன் தரக்கடமைப் பட்டுள்ளேன் என்ற கருத்தில் கடன் சீட்டெழுதிக் கையொப்பமிட்டு தவினர் என்பதாம். வேலை - கடல். கல்லி - அகழ்ந்து. தகுவன் - சோமுகன் என்ற அசுரன். (வராக அவதாரம்).* 3

4. சத்தியமும் தருமமும்குன் றியபாழ்ங் காலம்
தரையில்உதித்(து) அவையிரண்டும் தழைக்க வேண்டும்
புத்தியெய்தி, வாடஎன்னை விடுத்தோன் ஆரோ
புவனமுற்றும் உண்டநின்போற், பொருள்வே றுண்டோ
துத்தியத்தாற் பரகாலன் உய்யக் கொண்டாய்!
சுடர்ஆழி யோடுசங்கும் துலங்கப் பூண்டாய்!
கைத்திகழ்ந்தான் ஒருவனுக்கும் கதிப்பே றீந்தாய்
காழிநகர்த் தாடாளா கருணை மாலே

*குறிப்பு: பொருள் - உன்னையன்றி வேறு கடவுள் இல்லை. துத்தியம் - துதிப்பாடல். பரகாலன் - திருமங்கை ஆழ்வார். கைத்து - வெறுப்புடன். இகழ்ந்தான் - சிசுபாலன்.* 4

5. தருணம்இதென றறிந்தஉனக்(கு) யான்என் சொல்கேன்
தமியனேன் மனவெளியில் தந்த காட்சி
இருநிலத்திற் கண்ணாரக் காண நல்கி
எனையும்உன(து) அடியவரு(டு) இருத்த வேண்டும்
மருமலிபைந் துளவணிதோள் நான்குள் ளானே
வஞ்சகருக்(கு) அருள்சிறிதும் வழங்கா வள்ளால்
கருனன்உய்யக் கிழப்பனவன் வடிவும் கொண்டாய்
காழிநகர்த் தாடாளா! கருணை மாலே

*குறிப்பு: மருமலி - மணம் நிறைந்த. துளவு - துளசி.* 5

6. நின்தலங்தோ றருந்தமிழ்ப்பாப் பதிகம் பாடி
நெடிதுஉயிர்க் கின்றேன்கவலை நீக்கி டாயேல்
அன்றுருஅணிக்கச் சியில்ஒருபா நிமித்தம் செய்த
ஆடல்பொய்யாம் என்றுமனம் அயர்ந்தேன் கண்டாய்
குன்றதனைக் குடையாக்கொண்(டு) அளவில் ஆன்கள்
குலைதல்இல்லா(து) ஆண்டபெருங் கொற்றத்(து) எந்தாய்
கற்றதனுல் விளாஎறிந்த வென்றி யானே!
காழிநகர்த் தாடாளா! கருணை மாலே.

*குறிப்பு: ஒருபா - "கணி கண்ணன் போ என்றான்" என்ற கவி. மலை- கோவர்த்தனகிரி. விளா - விளாங்கனிக்காக. கன்று வடிவில் வந்த அசுரனைத் தூக்கி வீசிக்கொன்றது.* 6

7. நான்மறைஓ தியஅனந்தம் கடவு ளாரும்
நாரணனே! எனத்துணிந்து நவிலும் என்னை
ஊன்மருநா வினர்தாமும் இகழக் கண்டாய்
உளம்அயர்ந்தேன் சிறிதருட்பேறு (உ)தவொண் ணுதோ
வான்மகிபர் நடுநடுங்கப் புரிவார்க் கொல்வாய்
வலியபுள் ஊர்ந்(து) அடியவர்தம் மனத்தும் செல்வாய்
கான்மலிசீர்க் கமலமலர்க் கழனி சூழும்
காழிநகர்த் தாடாளா! கருணை மாலே.

*குறிப்பு : ஊன்மர் - புலால் உண்போர். வான்மகிபர் - தேவருலகத்து அரசர். புரிபவர் - அசுரர்கள். வலியபுள் - கருடன். கான்மலி - மணம் மிகுந்த. கமலமலர் - தாமரைப்பூ* 7

8. விண்ணில்உள தேவர்குலம் நாண அன்(று)ஓர்
வேழம்உய்யக் காத்தபுகழ் விளம்பும் என்னைத்
திண்ணியரெல் லாம்புகழும் சீர்செய் யாமல்
திகைக்கவிடத் தகும்கொல்லோ, திருக்கண் பாராய்
வெண்ணிலவார் சடையானும் வியப்ப நின்றுய்
விடமலிபாந் தளில்நடித்தாய்! விழைவார் தூதாய்க்
கண்ணிலிதன் மக்கள்குடி கெடுத்(து)இன் புற்றாய்
காழிநகர்த் தாடாளா! கருணை மாலே.

*குறிப்பு : வேழம் - கஜேந்திரனை யானை. வியத்தல் - மோகினியாகிய போது. பாந்தள் - காளிங்கனை பெரிய நாகம். விழையார் - பகைமை யான. கண்ணிலிதன்மக்கள் - திருதராட்டிரன் மக்களான துரியோதனன் ஆதியோர்.* 8

9. ஆகமுடன் உயிர்பிழைப்பத் துதித்த சேய்க்கா
அரியுருக்கொண்(டு) ஆடகனை அட்டாய்! ஆன்கள்
சோகமிரு வாறுசெய்வான், இரக்கின் றேனைத்
துயர்ப்படுத்தல் நீதிஎனச் சொல்லப் போமோ
சாகரத்தில் தேர்விடுத்(து)ஓர் தொழும்பற் காத்தாய்
சனகன்மகள் மனம்நோவத் தவறு செய்வான்
காகவுருக் கொண்டானும் உய்யப் பார்த்தாய்
காழிநகர்த் தாடாளா! கருணை மாலே.

*குறிப்பு : சேய் - பிரகலாதன். அரி - நரசிங்கம். ஆடகன் - இரணியன். செய்வான் - செய்யும்பொருட்டு. சாகரம் - கடல், காகவுருவில்வந்த அசுரன். தவறு - சீதாபிராட்டியின் தனங்களைக் கொத்தவந்தவன் - அவனை கொல்லாமல், கண் ஒன்றினது பார்வையைக் கெடுத்தியது. சனகன் மகள் - சானகி (சீதை)* 9

10. எளியேன்நுவல் புன்மொழிப்பா மாலைக் கின்பற்(று)
இதயமறி தரஒருசொல் இசைத்த செவ்வாய்ப்
புளியடிஆழ் வார்முதல்ஓர் பதின்மர்க் கீந்த
பொனனடியென் மனத்தினிடை பொருத்தொண் ணுதோ?
கிளியனையாட்(கு) எண்ணில்கலை அளித்த வீறும்
கேழ்இழையார் பலர்கலைகொள் கிறியும் கூறில்
களியடைவாய்! கார்தவழ்தண் மலர்ப்பைஞ் சோலைக்
காழிநகர்த் தாடாளா! கருணை மாலே.

*குறிப்பு : புளியடிஆழ்வார் - நம்மாழ்வார். கிளியனையாள் - துரோபதைக் குப் பல ஆடை தருதல். கேழ்இழையார் - கோபியர் பலரது ஆடைகளைக் கவர்தல். கிறி - பரிகாசம்.* 10

11. தண்தமிழ்ப்பாப் புலவர்பலர் பழிச்சும் காழித்
தனிநகரில், தாடாளன் றன்னைத் தாமக்
கண்தழைக்கும் கருமுகில்நேர் கருணை மாலைக்
கழைவனத்துக் கரடகொம்பன் கழறும் பாடல்
வெண்தகைப்பா ரதியறிய வலிந்து கூவி
விளம்பெனச்சொல் லியசரதம் மேய தாமால்
அண்டர்களும் எய்தரிய பேறு நல்கி
அகற்றுத பரமபதத்(து) அமைக்கும் அன்றே

*குறிப்பு : தாமக்கண் - தாமரை மலர் போன்ற விழிகள். கரடகொம்பன் - தண்டபாணி சுவாமிகள் பல பெயரில் ஒன்று. சொல்லியசரதம்-திருமால் சுவாமிகளிடம் இப்பாடல் பாடும்படி கேட்டது உண்மையினையுடைய தென்பதாம்.* 11

## ஷை பதிகம் - 2வது

### காப்பு. வெண்பா

கஞ்ச மலர்வாவிக் கழிநகர்த் தாடாளன்
வஞ்சவிளை யாடலொன்று வந்துசெய்தான் அஞ்சல்நல்கி
மெய்யருட்கூத்(து) ஒன்றியற்றல் வேண்டித் துதிக்கிறேன்
கையமுகச் சேனையர்கோன் காப்பு.

குறிப்பு : கைய - துதிக்கையைக்கொண்ட, சேனையன்கோன் - கண நாதன் சேனைமுதலியென்பதுமுண்டு. கணபதிக்குத் தும்பிக்கைஆழ்வார் என்பதுமுண்டு. 1

1. நனவினில் மெய்யடி யாருடன் ஆடிடல்
நாடிமி கத்தளர்வேன்
கனவினில் மற்றைய ரோ(டு)உரை யாஒரு
காட்சிபெ றத்தகுமோ
தினகரர் அன்னகு ழைச்சியர் ஆடிய
சீர்மலி காழியினில்
வனமரு பைந்துள வம்புனை வாய்இவண்
வஞ்சனை செய்யேலே

குறிப்பு : நனவு - விழிப்புநிலை. தினகரர் - சூரியர்கள். வனம் - அழகு. துளவம் - துளசி.

2. தீயம தத்தினர் ஆண்மைகள் கண்டு
திடுக்குறும் என்னிடைநின்
சேயம லர்க்கழல் வாசனை வந்து
செறிந்து(ம்)ம யங்குவனோ
காயக நெஞ்சினர் காணரி தாமிளிர்
காழிந கர்க்கிடைவாழ்
மாயவ னேஎதிர் வந்தரு ளா(து)இவண்
வஞ்சனை செய்யேலே.

குறிப்பு : தீயமதத்தினர் - புறச்சமயத்தோர். ஆண்மை - அரசாட்சி. காயகநெஞ்சினர் - வஞ்சமனத்தோர். உம்மை - சிறப்பு. 2

3. தந்திர சித்தர்தம் வென்றிகள் கண்டு
தணப்பரி தாயமகா
மந்திர யோகியர் வாடுறு தீமை
மறுக்கவ லாயலையோ
செந்திரு வாழும்உ ரத்தர சே! மலி
சீர்திகழ் காழியில்லோர்
வந்தியன் உய்யும்வி தம்செய்து ளாய்! இவண்
வஞ்சனை செய்யேலே.

*குறிப்பு : மறுக்க - மாற்றியமைக்க. உரம் - மார்பு. வந்தியன் - துதிப் பாடல் பாடிய திருமங்கையாழ்வார்.* 3

4. எவ்வகை யாகிய தெய்வமும் நீயென
எண்ணிஉ ணர்ந்தஎனுள்
பொய்வலி மைச்சில உண்டென வந்து
புகன்றிடல் நீதிகொலோ
மைவழி மேனிவ ரோதய னே! வளம்
மன்னிய காழியினோர்
வவ்வருள் நாரண னே! இனி யாயினும்
வஞ்சனை செய்யேலே.

*குறிப்பு : சில - சிலதெய்வவடிவம். மைவழி - கருமை நிரம்பிய, வரோதயன் - கருணையுடையவன். வவ்வு - விரும்புகின்ற.* 4

5. அன்பர்அ னேகர்ப ராவிய காழியில்
ஆடல்செய் நாரணனே
இன்பம்வீ ரும்பும்எ னைத்துயர் எய்தி
இளைக்கவி டத்தகுமோ
நின்பதம் நாடிய நேயமும், நீஎனை
நேடுறும் நிச்சயமும்,
மன்பதை முற்றுண ரப்புரி யா(து)இவண்
வஞ்சனை செய்யேலே.

*குறிப்பு : நேயம் - அன்பு. நேடுறும் - விரும்புகின்ற. மன்பதை - உலக மக்கள்.* 5

6. புண்டரி கப்பிர மாதியர் நண்ணிய
பொற்புறு காழியில்ஓர்
தொண்டன்வி ரும்பிய வாறுசெய் தாய்!மிளிர்
தொல்படை ஐந்துடையாய்
வண்டர்க ளைக்கறு வித்,தரு மத்தினர்
வாழ்வது செய்எனவே
மண்டல முற்றறி யப்புகழ் வேனிடை
வஞ்சனை செய்யேலே.

*குறிப்பு : புண்டரிகம் - தாமரை மலர். ஐந்துபடை - பஞ்சாயுதம். அவை சங்கு, சக்கரம்-வில்-வாள்-கதை-என்பன.* 6

7. பானல்வி ழித்திரு மாதொடு நீர்புனை
பார்மகள் இன்புற,மெய்
ஞானவி ளக்கம்உ ளார்வரு காழிந
கர்த்தலை வாழ்நெடியோய் !
ஆனசம் ஆதிய கொல்பவர் ஒல்குறும்
ஆடல்செ யக்கருதும்
மனமி கக்கொள்என் நெஞ்சம்வ ருந்துற
வஞ்சனை செய்யேலே.

*குறிப்பு : பானல் - நீலோற்பலமலர். நீர்புனை - கடலைச் சூழக்கொண்ட. பார்மகள் - பூமிதேவி. ஆன்அசம் - பசுக்களும் ஆடும் ஆகிய உயிர்கள். ஒல்குறும் - நாணமடையத்தக்க. மானம் - பெருமை.* 7

8. ஆரண மூலம்எ னத்திகழ் எண்பொறி
ஆதர மிக்குடையார்
காரணன் எறன்றி யும்படி மிக்குயர்
காழியில் வாழ்முகிலே
கூரண வும்பல பற்கோள்இ டங்கர்
கொலைப்பட வென்(று)அடல்மால்
வாரணம் ஒன்றுபு ரந்தனை! என்னிடம்
வஞ்சனை செய்யேலே.

*குறிப்பு : ஆதரம் - அன்பு. எண்பொறி - அட்டாக்கரம். காரணன் - எவற்றுக்கும்முதற்பொருள். கூர்அணவும் - கூர்மையையுடைய. பல பற்கள் - பலவான பல்வரிசை கொண்ட. இடங்கர் - முதலை. வாரணம்- கசேந்திரனை யானை.* 8

9. கந்தம லர்ப்பொழி லிற்,கமு கைப்பல்
கயற்றிரள் பாய்கழனிச்
செந்தகை தோய்தரு காழியில் மேவிய
சீதர னே!சினவிச்
சொந்தம னைக்கண்நி றுத்திய தூண்நடு
துட்டனை அட்(டு) ஒருநன்
மைந்தன்உ யப்புரி தன்மைச்சொல் வேன்,அழ
வஞ்சனை செய்யேலே.

*குறிப்பு : கந்தமலர் - மணமிக்க பூக்கள். கமுகை - பாக்கு மரத்தின்கண். கயல் திரள் - மீன் கூட்டம். செம்தகை - செழிப்புள்ள. சினவி - மிக்க கோபத்துடன். சொந்தமனை - இரணியனது அரண்மனையில் உள்ள ஒரு தூணின் நடுவிலிருந்து தோன்றி. மைந்தன் - பிரகலாதன். 9*

10. பத்தடி யார்கள்உ ரைத்தம றைப்பொருள்
பற்றிய பத்தியுள்ளார்
சித்தம்எ னைத்தழு வும்படிஆடல்
செயத்துணி கின்றிலையே
உத்தமர் வாழ்வுறு காழிவ ளம்பதி
உற்றெளிர் அச்சுதனே
மத்தம்அ ணிந்தவன மெச்சிறை வா,அருள்
வஞ்சனை செய்யேலே.

*குறிப்பு : பத்து அடியார் - ஆழ்வார்கள். தழுவுதல் - மதபேதமின்றி ஒருமைப்பாட்டுடன் ஆதரித்தல். மத்தம் - ஊமத்தம் பூவணிந்த சிவன். 10*

11. காழிவ ளம்பதி நாரணன் நாடொரு
காரணம் நாடியதால்
வாழிய செஞ்சுடர் சொற்படி, அற்பமும்
வஞ்சனை செய்யேல் என்(று)
ஏழிசை வண்தமி ழால்அணி நெல்லை
யிடத்(து)உறை வான்நுவல்பா
ஆழியி னும்பெரி தாம்மன மையல்
அழித்தரு ளைத்தருமோ.

## சந்தம் - திருப்புகழ்

தானனதத் தானன தானன -தனதான

நாயினையொப் பார்சீறி மேல்விழ - இரவாதே
நான்மகிழ்தற் காமாறு நீசெய - நினையாயோ
தீயிதெனச் சூழ்கோரம் ஆர்கலி - கெடுமாறே
சேண்வழிபுட் கோன்மீது நேர்தினம் - உதியாதோ
தாயினுமிக் காய்! தான வாதியர் - குலகாலா
தாருநிழற் சீர்வானு ளார்உய - அமுதீவாய்
காயிகம்உற் றூர்தாமும் வாழ்வுற - அருள்மாலே
காழிநகர்த் தாடாள னாகிய - பெருமாளே.

*குறிப்பு : நாயை ஒப்பாகப் பிறர்மேற் சீறுவோர் லோபிகள். கலி - வறுமை சேண்வழி - ஆகாயமார்க்கமாக. புள்கோள் - கருடன். தாருநிழல் - கற்பக மரநிழல். காயிகம் - சரீரத்தாலான தொண்டு.*

### *வெண்பா*

காழியெனும் சீராம விண்ணகரம் காத்தருளும்
ஆழிவண்ண மாலே அடியனேன் - விழியிதழ்
வாயார் மயல்முதலா மன்னுதிரி ஏடணையில்
தோயாத வாறெருசொற் சொல்

*சிவமயம்*

## ஷை சிவபிரான் பதிகம்

### *காப்பு-வெண்பா*

அண்டர் பரவும் அணிக்காழி மாநகரைக்
கண்டதனால் எய்தும் களிப்புரைக்கத் - தொண்டர்
பலரொடுபோய்ச் சாரணரைப் பாழாக்கி மீண்டோன்
மலர்புரைமென் தாட்பொடிகா வல்

1. மவுன நிச்சயம் இன்னதென் றுணரேன்
மற்க டம்பொரும் மனத்தினை அடக்கேன்
பவுர ணைச்சசி அன்னவாண் முகத்தார்
பாசம் ஆதிய பழுதும்அற் றில்லேன்
சவுர வாதிய சமயம்ஓர் ஆறும்
தாங்கும் வைதிகர் தம்தவ மிகையால்
கவுணி யக்குகன் அவதரித் திட்ட
காழி யூரினைக் காணப்பெற் றேனே.

குறிப்பு : சசி - முழுநிலவு. சவுரம் - சூரியவழிபாட்டுக்குரியது. ஆறும் - மற்றும், சைவம் - சாத்தேயம் - வைணவம் - காணபத்தியம் - கௌமாரம்- ஆகஆறுசமயங்கள். கவுணியக்குகன் - திருஞானசம்பந்தராக அவதரித்த முருகன் தலம். 1

2. அலகி லாவினைத் தீமைமிக்(கு) உடையேன்
அறிஞர் தம்மையும் அவமதித்(து) இகழ்வேன்
சலன வஞ்சகர் தம்சமர்க்(கு) ஒதுங்கேன்
சற்றும் மேலவர் தம்மொடு பழகேன்
நிலவு(உ) லாம்சடை நின்மலன் மனையாள்
நீசர் புன்னெறி நீக்கவேண் டுநர்க்குக்
கலச மென்முலைப் பால்அளித் தருளும்
காழி யூரினைக் காணப்பெற் றேனே

குறிப்பு : அலகுஇலா - அளவில்லாத. சலன - நிலைத்தமனமில்லாத, நின்மலன் - சிவபிரான். மனையாள் - உமையவள். புன்நெறி - சமண்சமயம். 2

3. தருணம் நன்கறிந்(து) உதவும்நட் பில்லார்
தங்கள் வாசலில் சந்ததம் திரிவேன்
வருணம் ஆச்சிர மங்களின் நிலைபோய்
மனத்திற் றோன்றிய வாறெலாம் புரிவேன்
அருண மேடையில் அரம்பையர்த் தழுவும்
ஆசை கொண்டும்ஓர் ஆருயிர் கொல்லாக்
கருணை மாதவ ரேதொழத் தக்க
காழி யூரினைக் காணப்பெற் றேனே

குறிப்பு : அருணமேடை - மேல்மாடி. அரம்பையர் - தேவருலகமாதர். 3

4, வேத வேள்வியிற் கொலையையும் இகழ்வேன்
விரும்பொ ணுதன் மிகவிழைந்(து) அயர்வேன்
சாத லும்பிறத் தலும்நினைத்(து) அஞ்சேன்
சழக்கர் சொல்பல தலைமிசைக் கொள்வேன்
சீத நாண்மலர் சொரிந்துமிக் கேத்தித்
தெய்வம் ஒன்றெனத் தெளியவல் லார்க்குக்
காதல் உற்றன யாவையும் வழங்கும்
காழி யூரினைக் காணப்பெற் றேனே.

குறிப்பு : வேள்வி - யாகம். அது பசுபந்தனமென்ற கொலையைக்கூறுவது எல்லா இடத்தும் கொலைதீது என்றநிலையில் சீவகருணையை வேண்டுபவர் சுவாமிகள். சீதநாண்மலர் - குளிர்ந்தபுதுப்பூ. காதல் - அன்பு. 4

5. புண்ட ரீகன்கை விதியினை மதித்துப்
புலர்கின் றேன்உயர் புண்ணியம் செய்யேன்
தண்டம் நீறு, கீள் ஆதிய புனைந்தும்
தனம் இ ரந்துழல் தன்மைவிட் டில்லேன்
அண்டர் ஊரையும் வெறுத்துமா தவமே
ஆற்றி, ஐந்தெழுத்(து) அறைந்துகண் ணுரக்
கண்ட தொண்டர்தம் கலிப்பிணி ஒழிக்கும்
காழி யூரினைக் காணப்பெற் றேனே.

*குறிப்பு : தண்டம் - நீறு - கீள் ஆதியான துறவு நெறியைக்குறிப்பவை. தனமென்ற பொருள் விரும்புவது மாறுபட்ட தென்பதாம். கண்ணுரக் கண்டது இறைவன் திருவுருச்சேவை.* 5

6. குணக்கர் தம்மொடு பழகுதற்(கு) ஒல்கேன்
கோர முடவெம் குணம்கெட முயலேன்
நிணக்கு ழம்பு(உ)னும் புலையர்கைப் பொருளும்
நேடி வாடுறும் நெஞ்சுடைக் கடையேன்
மணக்க டாசலம் உரித்தவர் தோணி
வைத்து வாழ்தலின் வாரியும் பிறமும்
கணக்கில் ஊழிகண்(டு) அழிவிலா தவிரும்
காழி யூரினைக் காணப்பெற் றேனே.

*குறிப்பு : நிணம் - ஊன்(மாமிசம்). நேடி - விரும்பி. மணம் மணமுடைய கடஅசலம் - மதமிக்க மலை போன்ற யானை.* 6

7. மும்மல வாதனைப் பிணக்கில்ஓர் சிறிதும்
மூவக் கண்டிலேன், மூவிரண் டாய
சமய வாரிதி தோறும்உற்(று) உழல்வேன்
சகுண, நிர்க்குணச் சமரசம் அறியேன்
பமரம் ஆர்த்தவெண் தாமரைக் குமரி
பழகும் நாக்கொடு பழமறை பயில்செங்
கமல நான்முகன் பூசைசெய் துய்ந்த
காழி யூரினைக் காணப்பெற் றேனே.

*குறிப்பு : மும்மலவாதனை -ஆணவம். கன்மம் மாயை என்பவற்றின் துன்பம். மூவ - கெடும்படி. சமயம் கடல் போல் விரிவுபட்டன. சகுணம் - உருவம் நிர்க்குணம் - அருவம். சமரசம் - இரண்டுக்கும உள்ள பொதுநிலை. பமரம் - வண்டு - ப்ரமரம் என்பது வடசொல். குமரி - கலைமகள். பிரமபுரம் என்ற பெயர் பிரமன்வழிபட்டதால் ஏற்பட்டது.* 7

8. இணைமு லைச்சிறு மான்நிகர் மடவார்
எண்ணி லார்மிசை இச்சைவைத் துள்ளேன்
புணையெ னத்திரு வாதவூ ரடிகள்
புகழ்ந்த ஐம்பொறி புகன்றுஉயத் துணியேன்
பிணையொ(டு) ஒண்மழு மறைத்துவே டுவராய்ப்
பேடி யோடுபோய்ப் பெருஞ்சமர் விளைத்துக்
கணைய ளித்தருள் கண்ணுதல் காக்கும்
காழி யூரினைக் காணப்பெற் றேனே.

*குறிப்பு : பற்றுக்கோடு. பிணை - மான். பேடி - அருச்சுனன்.* 8

9. தேன்மு கக்கம லாதனத்(து) ஒருவன்
சிட்டி செய்தபார்த் திருத்தலந் தோறும்
ஊன்மு கப்பவர் தம்மையும் தடுக்கும்
உரம்பெற்(று) உய்கைவேட்(டு) உரைத்துரைத் துழன்றேன்
வான்மு கட்டள வியமலைக் கோன்செய்
மாத வத்(து)உமை வனமுலை தழுவிக்
கான்மு ளைத்துணை பயந்தவர் வாழும்
காழி யூரினைக் காணப்பெற் றேனே.

*குறிப்பு : தம்மையும் என்றதால், கொலை செய்பவர் தம்மையும் என்று கருதவுள்ளது. உரம் - திருவருள் வலிமை மலைக்கோன் - மலையரசன். கான்முளை - மக்கள். (கணபதி - முருகன்)* 9

10. வேல்வ லான்எனப் பலர்புகழ் கீர்த்தி
மிலைந்த பார்ப்பன விடலையா தியராம்
நால்வ லாரொடு சேர்வது வேட்டு
நரர்ப லோர்இகழ் நவையுறு சிறியேன்
நூல்வ லார் மிகப் பரவுமார்க் கண்டர்
நோன்பு மெய்ப்பட நொடியினில் நீண்ட
கால்வ லார்சிவை தன்னொடு விளங்கும்
காழி யூரினைக் காணப்பெற் றேனே. 10

*குறிப்பு : விடலை - சிறுவரான திருஞானசம்பந்தர். நவை-குற்றம். நொடியினில்-கணப்போதில். கால்வலார்-எமனை உதைக்கநீட்டிய திருவடியின ரான சிவபிரான்.*

11. பிழைஒ ராயிரங் கோடிசெய் திட்டும்
பெரியர் எய்துமெய்ப் பேறுஉற வேண்டிக்
கழைவ னத்துறும் திருப்புகழ்க் காரன்
காழி யூரனைக் காணப்பெற் றிடும்நாள்

குழையில் வெள்ளிய சங்கணி செவிகள்
கொள்ளப் பாடிய குளிர்கவி பத்தும்
தழையும் இன்சுவை யுடையன எனத்தேர்
தன்மை யாளர்தம் தவம்பலிப் புறுமே.

*குறிப்பு : கழைவனம்-திருநெல்வேலி. குழையில் - குண்டலமாக. கொள்ள - ஏற்குமாறு. தழையும் - வளமான* 11



## ௐ 2-ம் பதிகம் சிவபிரான்

### *காப்பு - வெண்பா*

தெள்ளறிஞர் போற்றுமிசைச் சீகாழிச் சித்தர்முன்னென்
உள்ளமுங் கொள்வீரென் றுரைக்கின்றேன் – அள்ளற்
கடலடைத்த மாலனையார் கண்டு வியக்கும்
திடமுறுவாழ் வெய்தநினைத் தே

## நூல்

"தோடுடையசெவியன்" - என்ற தேவாரப்பண்

1. செப்பரும் சீர்பல தோய்தர நீடுறு சீகாழியிற் சிவனே
அப்பனை நாடிவ ருந்தொரு சேயின(து) அகம்கொண்டனை அதனால்
இப்படி யிற்கொலை யும், புலை யுந்தவிர்ந்(து) எல்லோர்களும் வாழ்வான்
ஒப்பறு சித்திகள் செய்யவி ரும்புமென் உள்ளம்கவர் வாயே.

*சேய் - திருஞானசம்பந்தர்* 1

2. தென்னையும் மாவும்நெ ருங்கிநி லாவிய சீகாழியிற் சிவனே
அன்னைதன் ஒக்கலை யிற்றிகழ் சேயின(து) அகம்கொண்டனை அதனால்
மின்னையொப் பாம்இடை யாளொடும் சண்முக வேளோடும்வெள்
உன்னைஅ டிக்கடி நாடிவ ருந்துமென உள்ளம்கவர் வாயே. [விடைமேல்

ஒக்கலை - இருப்பு. *சேய் ஞானசமபந்தர்* 2

3. சேடன்முற் பல்பணி பூணும்எங் தாய்எழிற் சீகாழியிற் சிவனே
நாடலில் பார்ப்பனச் சேய்மனம் கொண்டனை, ஞாலம்பகர் கின்ற(து)
ஏடவிழ் கொன்றைஒப் பாம்பல பாடல்கள் இசைத்தின்புற வேண்டி
ஊடலும் சிற்சில வேளையிற் கொள்ளும்என் உள்ளம்கவர் வாயே.

*சேடன் - ஆதிசேடன். பணி - நாகம். ஏடுஅவிழ் - இதழ்விரிந்த* 3

4. பித்தனென் றெள்ளினர்க் கும்பரிந் தாய்பெரும் பீடெய்திய காழிச்
சித்தர்பி ரானென வாழ்சிவ னேஒரு சேய்நெஞ்சுகொண் டனையால்
இத்தரை யிற்பசுக் கொன்றுதின் பாருடன் எதிர்வாதிட எண்ணி
உத்தமர் தாள்மலர்த் தூள்புனை கின்றஎன் உள்ளம்கவர் வாயே.

*எள்ளினர் - இகழ்ந்த சுந்தரர். பீடு - பெருமை.* 4

5. காய்திருக் கண்களோர் மூன்றுடை யாய்! தமிழ்க் காழிப்பதிச் சிவனே
வாய்திறந்(து) ஒலிடும் சேய்மனம் இன்புற வலிதிற்கவர்ந் தனையால்
பேய்திறம் பேசிய புன்சம யத்தர்நின் பெருமைக்கிழி வோதல்
ஓய்திறம் செய்திடல் உன்னிஇ ரக்குமென் உள்ளம்கவர் வாயே.

*காய் - ஒளி செய்யும் தன்மையின கண்கள். மூன்றும் என்பதாம். வெய்யில் காய்கிறது - நிலவு காய்கிறது. நெருப்பிற் காய்ச்சுதல் என்பன* 5

6. தண்பொழில் சூழ்தரு காழிந கர்ச்சிவ சம்போ!மயல் சாராக்
கண்பெர்ழி நீரொ(டு)அ ழுத்தகு சேய்சிறு கருத்தைக்கவர்ந் தனையால்
புண்பொலி வுண்பவர் தம்பகை உற்றது போக்கத்தகு பொற்பார்
ஒண்பொருள் உன்பதம் என்றுணர்ந் தேங்குமென் உள்ளம்கவர் வாயே

*புண்பொலிவு - ஊன் வகை. ஒண்பொருள் - உண்மையான துணை* 6

7 சாகைம றைக்குலம் போற்றிய காழியிற் தழைக்கும்சிவ னேஎன்
வாகைஒன் றும்கரு தாதமும் சேயது மனதைத்கவர்ந் தனையால்
ஈகையில் லார்மனை தோறலை யாதுனை எண்ணித்துதி பாடும்
ஓகைவி ளைந்தடைந் தேன்இக ழாமல்என் உள்ளம்கவர் வாயே.

*சாகை - கிளை. வாகை - பெருமை ஓகை - உவகை.* 7

8. தேவதத் தன்பெற வாளிஒன் றீந்தருள் சிவனேஅருட் காழிக்
காவல னேஒரு பாலகன் நெஞ்சைமுன் கவர்ந்திட்டது மெய்யேல்
ஆவலுற் றுள்ளன யாவும்மு டித்துன(து) அடியாரொடு கூடி
ஓவரும் வீடுபு கப்புரி வான்என(து) உள்ளம்கவர் வாயே

*தேவதத்தன் - அருச்சுனன். வாளி - அம்பு. ஓவரும் - விடக்கூடாத* 8

9. ஐந்தணிக் கையனைக் கந்தனைத் தந்தருள் அரனேஅடற் காழி
மைந்தர்பி ரான்மன தைக்கவர்ந் தாயெனல் மறைக்கத்தகும் பாற்றோ
கந்தம லர்ப்பிர மன்பகர் நூல்இகழ் கள்ளப்புற நெறியோர்
உந்தடல் ஆண்மைஅ ழிக்கவி ரும்புமென் உள்ளம்கவர் வாயே.

*நூல் - நால்வேதம். உந்துஅடல் - வெல்லும் ஆற்றல்*

நால்வரிற் சீரியன் நெஞ்சுக வர்ந்தருள் நகுவெண்பொடி புவியின்
மேல்வயங் கும்படி செய்ததுண் டேல்,அதன் வேர்கீன்றுணும் வெய்யோர்
கோல்வலி யும்பெறச் செயதல்நன்றன்(று)இது கூறுத்தெரி வான்ஏன்?
ஓல்வளைக் காழிப்ப திச்சிவ னேஎனது உளமும்கவர் வாயே.

*நகுவெண்பொடி - திருநீறு. மேல் - உலகின் மீது. அதன்வேர் - திருநீறு உண்டாதற்கு மூலமான பசுக்கள். கீன்று - உயிரைக்கொன்று. வெய்யோர்-கொடியவர். கோல்வலி - செங்கோல் ஆட்சி (ஆங்கிலேயர்) ஓல்வளை - ஒலிக்கும் சங்குகள் வாழ்கின்ற - வயற்சிறப்பு* 10

தீதில்வ ளம்பெறு காழியில் மேவிய சிவனைத்திருப் புகழோன்
ஆதியில் ஓர்மகன் நெஞ்சுகொண் டாய்,எனது அகமும்கவர்ந்து
ஓதிய பாடல்ஓர் பத்தும்வி ருப்புடன் ஓவாதுரைக் கின்றோர் [ஆள்என்று
மேதியி ஞனொடு நான்முகன் செய்துயர் மேவாமல்உய் வாரே.

*மேதியினன்-எருமைவாகன் எமனது இறப்பும், பிரமனுலான பிறப்பும் அடையார். வீடு சேர்வார்கள்.* 11



*தேவி சகாயம்*

## திரிபுரசுந்தரி : அம்பிகைபதிகம்

### *காப்பு வெண்பா*

சீகாழிக் கோயிற் சிவைபாற் றிருமுலைப்பால்
ஆகாரம் சற்றீந் தருளென்று பாகாய
செந்தமிழாற் போற்றுதற்குச் சிந்துரத்தின் சென்னியுளான்
கந்தனென்னு மைந்தர்பதம் காப்பு

### *நூல். எண்சீர்*

1. காகாஎன்(று) அநுதினம்நிற் போற்றிசைக்கும் தொண்டர்
களிப்படைய ஏனையர்உட் கலக்கமுறக் காண்பான்
போகாதி பரும்வியக்கத் தக்கசெயல் அநந்தம்
புரிந்துனது பொன்னடியிற் புகுவதுவேட்(டு) அடைந்தேன்
சாகாத சித்தர்பலர் வழிபடுபூங் கொம்பே!
தமம்அனைத்தும் திரண்டனைய தார்குழற்கோ கிலமே
சீகாழிச் சிவன்புணரும் திரிபுரசுந் தரியே
திருமுலைப்பால் என்றனக்குச் சிறிதுகொடுத் தருளே.

*குறிப்பு: காகா - காப்பாயாக, காப்பாயாக. போகஅதிபர் - இந்திரன் முதலியோர். தமம் - இருட்டு (கறுப்பு) தார்குழல் - நீண்ட கூந்தல். கோகிலம் - குயில். கறுப்பு நிறம், கூந்தலுக்கும் குயிலுக்கும் இசையும்.* 1

2. அசுகைமனத் தானவரிற் கொடியவரை யெல்லாம்
அழித்(து)அறத்தோர் அனைவருக்கும் ஆக்கமிகப் பெய்து
பசுவினம்சற் றேனும்வருந் தாநலம்செய் திடவே
பாலிக்க வேண்டுமென்றுன் பதம்பணிந்தேன் அம்மா
விசுவமச்சத் தகுங்காழிச் சிவன்புணர்கோ மளமே!
வியந்துனக்கென்(று) ஒருகவியும் விளம்பிடல்இல் லாத
சிசுவினுக்கும் அன்றுபரிந் தளித்ததுண்மை யன்றோ
திருமுலைப்பால் என்றனக்குச் சிறிதுகொடுத் தருளே.

*குறிப்பு: அசுகை - அவச்செயல். பாலித்தல் - செய்தல், விசுவம்- உலகம். கோமளம - இளமையும் எழிலும் உடையவள். அம்பிகைக் கென்று தனியே பாடாதவர். சிசு-திருஞானசம்பந்தர். பரிந்து-விருப்புடன்* 2

3. கைத்தலத்தில் மணியேந்தித் தலந்தோறும்போய்த் துதித்த
கவுணியச்சேய்க்(கு) ஈந்தபின்னர் காசினியிற் பிறந்தார்
எத்தனையோ புலவர்என்போல் உன்னிடம்வந் திரந்தார்
இலாததனால், நன்குணரில் இதுவும்உன்றன் செயலே
புத்தமுதுண் டார்உடலம் பொடித்தபொடிப் பூசிப்
பூந்தராய்ப் பதியில்வளர் புண்ணியனார் புனிதச்
சித்தமுவந் திடச்சிரிக்கும் செந்துவர்வாய் மயிலே
திருமுலைப்பால் என்றனக்குச் சிறிதுகொடுத் தருளே.

*குறிப்பு: மணி - பொற்றாளம். காசினி - உலகம். புத்தமுது - புதியஅமுது. பூந்தராய் - சீகாழியின் பெயர். 12ல் ஒன்று* 3

4. புள்ளிமயில் ஊரும்நின்கைச் சேய்மொழியை நம்பிப்
புலரும்விதம் அத்தனையும் புகன்றிடலேன், அறிவாய்
கொள்ளியிடைச் சிற்றெறும்பிற் குலைகுலையா வண்ணம்
குறைவில்உண்மை யடியருடன் கூட்டுவையென் றடைந்தேன்
துள்ளியமால் விசைப்பரமன் இடம்பிரியா ளாகித்
தோணிபுரத்(து) அமரும்அம்மே! தொல்பரங்குன் றருகில்
தெள்ளியநீர்க் கயத்துறும்சில் கயல்களும் உண்டுய்ந்த
திருமுலைப்பால் என்றனக்குச் சிறிதுகொடுத் தருளே.

*குறிப்பு: புலர்தல் - வருந்தல். இருதலைக்கொள்ளியிடை எறும்பு போல என்பது பழமொழி. முருகன் அருளுரையை மறுக்கவோ, மறக்கவோ இல்லாததும், அதற்கேற்ப அருட்பேறுவராமையுமாக, இடையில் மனம் துயரடைதலாம். துள்ளியமால்விடை-பெரிய இடபம் துள்ளுவது இளமை காரணமாக. பழமையான திருப்பரங்குன்றில் சரவணப் பொய்கையுண்டு. பராசரமுனிவர் சாபத்தால் அறுவர் மீன்*

*வடிவில் வாழ்ந்தனர். அம்மை திருமுலைப்பால் சிந்தியதை உண்டதால் அவர்கள் முன்னைய நிலையெய்தினர். முருகன் அவதரித்த சரவணப் பொய்கையின் பெயரால் இருப்பதுபற்றி திருப்பரங்குன்றைத் தொடர்பு செய்தனர் சுவாமிகள். அந்த அறுவரையும் அத்தவத்திலிருக்கும்படி ஆணை யிட்டு, பின்வந்து அருளினர் என்பதாம்.* 4

5. பாகநயத் தமிழ்க்கவிநூ(று) உரைத்தஅந்நாள் அருணைப்
பருப்பதத்தின் அருகியற்றும் பழுதறும்பே ராடல்
மாகமுளார் அறிந்தபடி மனிதர்களும் தேறி
வழுத்துதற்காம் ஆசைமிக வாய்ந்துழன்றேன் கண்டாய்
கோகனத் தடம்சூழும் கொச்சைநகர்ப் பெருமான்
கொண்டாடத் திகழ்உமையே, கோதறுதண் கருணைச்
சீகரவா ரிதித்துணைநேர் கண்களினால் நாடித்
திருமுலைப்பால் என்றனக்குச் சிறிதுகொடுத் தருளே.

*குறிப்பு: ஆடல் - தனது அநுபவம். மாகம் - வானுலகம். கோகனகம் - தாமரை. கொச்சை நகர் - சீகாழி. சீகரம் - அலை* 5

6. ஆறுவகைச் சமயமும்நின் அருள்மயமென் றறிந்தும்
அகிலத்தோர் களுநகமிக் கலமரலாம் கொல்லோ
பேறுசற்றும் பொருந்தாமல் இறப்பதஞ்சி, நின்தாட்
பிரசமலர்த் துணையிரண்டும் பெரிதும்நினைக் கின்றேன்
வீறுமலி வேணுபுரத்(து) இறைவர்உயிர்க் குயிராம்
மெல்லியலே, ஐங்கணையும் விறற்கரும்பும் கொண்டாய்
சீறும்அரா அனையவினைப் பேய்நடுங்கு மாறுன்
திருமுலைப்பால் என்றனக்குச் சிறிதுகொடுத் தருளே.

*குறிப்பு: "குறிக்கும் சமயம் ஆறும் தலைவியிவள்" என்பது அபிராமி அந்தாதி (கவி 63) அலமால் -வருந்துதல். பிரசமலர் - தாமரை ஐங்கணை - பூஅம்பு ஐந்தும் கரும்பு வில்லுமுடையவள் அம்பிகை. இவை பின் மன்மதன் பெற்றதாகும்.* 6

7. தப்பில்சுவை மோனைதொடை, ஓசை, நிறம் முதலாம்
தகைவிளங்கப் பலபாடல் சாற்றியும், ஓர் சற்றும்
இடபிரபஞ் சத்தில்உண்மைச் செயல்விளங்கக் காணேன்
இன்றுஅறிவுண் டாகிநின்பால் இவண்இரக்கத் துணிந்தேன்
மெய்ப்பிரம புரத்திறைவர் விரும்புகரும் பிடியே
விறற்றகுவர் தமக்கும்ஒரு மேன்மையுறச் செய்தாய்
செப்பியபாட் டத்தனையும் பலிதமுறச் செயும்நின்
திருமுலைப்பால் என்றனக்குச் சிறிதுகொடுத் தருளே.

*குறிப்பு : அறிவு உண்டாகி - செய்யுளியல்பிலேயே இருந்த நிலை மாறி, திருவருள் உடனிருத்தல் சிறப்பு, பொன் மலர் மணமும் உடையது போலாகும் என்ற உணர்வு. இரத்தல் - அம்பிகையிடத்தில் யாசித்தல்.* 7

8. பொய்வழக்கே பாராட்டும் சமயமுற்றும் மாயப்
பொருதுவென்று, நான்மறைகள் புகலும்நெறி ஆறும்
மெய்வலிமை யுடையனஎன்(று) உலகுணரக் காட்டி
விளையாட விரும்பியசீர் வீண்படலாம் கொல்லோ
மைவரும்பூம் பொழிற்புகலி வாழுமனோன் மணியே
மலரவன்ஆ தியராக வகுத்துரைக்கும் ஐந்து
தெய்வமுடன் உயிர்பலவும் ஈன்றவளாம் உன்றன்
திருமுலைப்பால் என்றனக்குச் சிறிதுகொடுத் தருளே.

*குறிப்பு: ஐந்து தெய்வம்-பிரமன், விட்டுணு, உருத்திரன், மயேசன் சதாசிவன் என்பவர்கள். இவர்களைப் பராசத்தி முதலில் உண்டாக்கினள் என்பதாம். "பிரமன் முதலாய தேவரைப் பெற்ற அம்மே" அபிராமி அந்தாதி (22)* 8

9. கங்கையிற்சீ ரியபுனற்பே(று) எய்தும்நலம் வேண்டிக்
கற்கிணறு தொட்டுலகோர் கண்டிகழத் தளர்வேன்
சங்கையில்மாட் சிமையடையும் காலம்வந்துற் றதனால்
தமிழ்கொடுன்னை இந்தவண்ணம் சாற்றும்நலம் பெற்றேன்
மங்கையரிற் றலையாய மரகதமா மணியே
வளம் பொலியும் கழுமலத்தூர் வாழவரு மயிலே
செங்கைவடி வேல்குகனுக்(கு) அன்றளித்தாய் நின்றன்
திருமுலைப்பால் என்றனக்குச் சிறிதுகோடுத் தருளே.

*குறிப்பு : சங்கையில் - அளவில்லாத, மரகதம் - பச்சைக்கல். சுவாமிகள் கிணறொன்று எடுத்தனர் அது பாறையாய் விட்டது என்ற குறிப்பு.* 9

10. கந்தைபுனை சொறியரையும் பேய்ச்சூரை, நெற்றோட்டுக்
கரமும் வெண்பீ ளையிற் பொலிந்த கண்ணும்உளார் தம்மை
விந்தைமலி எண்டிசைப்பா லகர்வியக்கும் வாழ்வில்
விடவும்வல்லாய் எனப்பலநூல் விளம்பல்பொய்த்தி டாமே
நந்தையணி காதுடையார் சிரப்புரத்தில் வாழும்
நாரணியே! சங்கரப்பேர் நன்முனிவ னுடன்என்
சிந்தையறி தரஒருக்கால் கனவில்வந்த துண்டேல்
திருமுலைப்பால் என்றனக்குச் சிறிதுகொடுத் தருளே

*நந்து - சங்கு, நெல்தோட்டுக்கரம் - பதர்ஒத்தகை.*

11- மருப்பொலிதண் சோலைமலி சண்பைநகர்க் கோயில்
வாழ்வானைத் தமிழ்விரகன் மகிழ்வுறப்பால் சுரந்த
பொருப்புறமும் முலையானை, உருவமுற்றும் தானுப்
பொலிவானை, நெல்லைநகர் புரிதவமே போலும்
திருப்புகழ்ப்பா வல்லன்இரந்து பாடுமிவை பத்துச்
செய்யுளும்நன் றுகுலமனத் தேர்ந்துதினம் செப்பும்
விருப்புடையார் எண்ணியபே(று) அனைத்தும்இகத் தெய்தி
வீடும்அடை வார்என்ன விளம்புமவர்பலரே.



## திருஞானசம்பர் பதிகம்

*காப்பு - வெண்பா*

ஆழிவிடம் உண்டான் அருளே வடிவாகிக்
காழிநகர் வந்த கவுணியனும் - கோழிக்
கொடியானைப் போற்றுதற்குக் கோதெர்ழிந்த கொற்றத்(து)
அடியார் பதத்துகள்காப் பாம்.

1. அஞ்சலெனச் சிவிகைமிசை அன்றொருநாட் கனவில்வந்து
வஞ்சமறத் திருநீறு வழங்கியநீ மறந்தாயோ
செஞ்சதங்கை துணைப்பூந்தாட் சிறுகளிறு போல்வானே
கஞ்சமமலர்த் தடம்சூழும் காழிநகர்க் கவுணியனே. 1

2. உரைக்கருமா தவந்தோய்ந்த உரோமசனென்(று) உனைப்பல்லோர்
தரைத்தலத்திற் சொலக்கேட்டும் சரவணனென்(று) இறைஞ்சிலனே
விரைக்கமலா தனத்தானும் வெள்வயிரப் படையானும்
கரைக்கடங்கா உவகைபெறும் காழிநகர்க் கவுணியனே.

*குறிப்பு: திருஞானசம்பந்தர், முற்பிறவியில் உரோமசமுனிவராக இருந்தவர். பிறந்தபின் முருகன் திருவருட்கலாமிசமெய்தினர். பிரமன், இந்திரன் வழிபட்டதலம் சீகாழி. விரை - மணம்* 2

3 நீநிறுவும் திருநீற்றின் நிறைகுறைதல் சகியாமல்
பாநிகழ்த்தும் தமியேனுட் பதைப்பொழியப் பாராயோ
தூநிலவார் சடைப்பரமன் சொற்படிசெய் திடப்பெற்றுய்
காநிருபன் தவம்பலித்த காழிநகர்க் கவுணியனே.

*குறிப்பு: கா-கற்பகத்தருவினையுடைய, நிருபன்-அரசன் இந்திரன்-அவன் சூரனுக்கு அஞ்சி, சீகாழியில்மூங்கிலாயிருந்துதவம்செய்தான், காவேரி வந்து உய்யப்பெற்றுன். எனவே, வேணுபுரமெனப்பெற்றது வேணு - மூங்கில்*

4. ஆவிநிலை உண்கின்றார் அனைவரையும் அழித்(து)ஆர்வம்
மேவிஉய்தல் குறித்துள்ளேன் வீணாகா விதம்செய்வாய்
பூவினுக்கோர் பணிபோன்று புண்ணியம் உயிர்க்குதவும்
காவிரிஉண் டாக்கியசீர்க் காழிநகர்க் கவுணியனே

*ஆவிநிலை-உயிர் நிலைத்திருக்க உதவும் உடல். எனவேஊன் என்பது பொருள்.* 4

5. அங்கைவளைக் குயில்போலும் அசலமகள் அணியாரக்
கொங்கையின்பால் சிறிதேனும் கொடுத்திடச்செய் திடல்வேண்டும்
செங்கைமணித் துணையேந்தித் தேவார மழைபெய்தாய்
கங்கையணி சடையாளர் காழிநகர்க் கவுணியனே. 5

6. சொற்பனுவல் பலபாடிச் சூட்டும்உண்மைத் தொழும்புள்ளேன்
அற்பர்மனை தொறும்ஏகா ஆர்வமும்தந் தருளாயோ
சிற்பரத்தி னிடைகலந்து திரும்பாத வீ(டு)உதவும்
கற்பகப்பைந் தருப்போல்வாய் காழிநகர்க் கவுணியனே 6

7. திக்கறிய நின்னடிமைத் திறம்பேணும் சிறியேற்கு
மிக்கபுகழ்ச் சித்தியொன்றும் விளங்காத விதமென்னோ
மக்கள்பிரான் உடற்கூனும் வன்சுரமும் மாற்றியருள்
கைக்கமல மலருள்ளாய் காழிநகர்க் கவுணியனே 7

8. கொல்லாத விரதியரைக் குளிர்நீற்றாற் கழுவிலிட்டாய்
நல்லான்கொன்(று) உண்பாரை நமன்அதுசெய் யொண்ணாதே
நெல்லார்தண் கழனிதொறும் நெடுவேற்கட் கடைசியர்கள்
கல்லாரக் களைகளையும் காழிநகர்க் கவுணியனே. 8

*கல்வாரம் - நீலோற்பலம். களைபோல வயலில் உள்ளதென்பதாம்*

9. நின்தந்தை செயுந்தவம்இந் நீணிலத்தில் திகழ்ந்தாற்போல்
என்தந்தை செயும்தவமும் இலங்கொருநாள் உதியாதோ
வன்தன்மைச் சூர்ச்செகுத்த வடிவமறைத்(து) ஒருபனைக்
கன்றன்ன உருக்கொண்டாய் காழிநகர்க் கவுணியனே.

*கன்று - இளம்பருவம்.* 9

10. முத்தொழிலும் செயத்தரும்நின் முண்டகத்தாள் முன்னும்என்னைப்
பொய்த்தொழிற்பா தகர்க்குள்அஞ்சிப் புலரவிடத் தகும்கொல்லோ
செய்த்தொழிலில் நெல்விளைத்துத் திரைகடற்பா முழுதளிக்கும்
கைத்தொழிலோர் பலர்வாழும் காழிநகர்க் கவுணியனே

குறிப்பு : முத்தொழில் - படைத்தல், காத்தல், அழித்தல்கள். திருஞானசம்பந்தர் - பூம்பாவையை எழுப்பியது படைப்பு. முயலகன் - நோய்தீர்த்தல்-பாம்பு விடம் தீர்த்தல், பாண்டியன் சுரம் தீர்த்தல் ஆதியன காப்பு. சைவ சமயத்தை நிந்தித்த சமணரைத் திருவருள் முன்னிலையில் கழுவிலிட்டது அழிப்பு. வேதாரணியத்தில் திருக்கதவை மூடப்பாடியது மறைப்பு. திருமணத்தில் அனைவருக்கும் வீடுபேறு தந்தது அருளல் என ஐந்தொழிலும் செய்தருளினர்.

அழிப்பில் மறைப்பையும், காத்தலில் வீடுபேற்றையும் அடக்கி முத்தொழில் எனக்கூறினர் ஆசிரிய சுவாமிகள். 10

11. அரவம்நிகர் பாழ்மதத்தோர் ஆணவம்தீர்த்(து) அருள்வலிமைக்
குரவரிற்சேர்ந்(து) உயும்ஆசை கொண்டதுன்றன் கொடையன்றே
பரவருமை தேறுமுழுப் பாவலவ ஞம்நீயும்
கரவரிற்காண் டல்முறையோ காழிநகர்க் கவுணியனே.

குறிப்பு : அரவம்-நாகம். குரவர்-குருமார்கள். கரவர்-உள்ளதை மறைப்பவர். இவர் பாழ்நெற்றியுள்ள சமண சமயத்தை மாற்றியவர். நீற்றின் சிறப்பை விளக்கியவர். சுவாமிகள் திருநீற்றின் மூலமான பசுவதை தீர முயல்பவர். ஆகவே உம்மிடம் உள்ள திருவருளை மறையாமல் தருக எனவேண்டினர்.

12. கந்தனருட் கலைதோய்ந்த காழிநகர்க் கவுணியனைச்
செந்தமிழ்த்தென் பாண்டிநெல்லைச் செந்திநா யகன்சேயாய்
வந்ததிருப் புகழ்க்காரன் வழுத்துமிவை போற்றவல்லார்
எந்தவிதத் தேனும்அன்பர் இனத்தினிற்சேர்ந் திடுவாரே 12

சந்தக்கவி

தானதனத் தனதன தானன — தனதான

தாமரையிற் குடிகொளும் நான்முகன் — விதியாலே
தாழ்வுமிகப் பெருகியி வாறயர் — வுறுவேன்மேல்
நீமகிழ்வுற் றுமையவள் பால்கமழ் — கனிவாயால்
நேரில்எழிற் பிரணவ ராசியம் — மொழிவாயே
பாமரமிக் குறுபல சாரணர் — குலகாலா
பாலவிழிச் சிவன்மிசை பாடல்கள் மொழிவோனே
காமனினைத் தலமரு பேரெழில் — உடையானே
காழிநகர்க் கவுணிய ஞகிய பெருமாளே.

பாமரம் - அறியாமை. பாலவிழி - நெற்றிக்கண்

முற்றிற்று.

ஓம்

## திருஞானசம்பந்தர் தேவாரம்

திருவிருக்குக்குறள் பண் - குறிஞ்சி. 1ஆம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

1 அரனை உள்குவீர், பிரமனூர்உள் எம்
பரனையே, மனம் பரவி, உய்ம்மினே.

2 காண உள்குவீர், வேணு நற்புரத்(து)
தாணுவின் கழல், பேணி உய்ம்மினே.

3 நாதன் என்பிர்காள், காதல் ஒண்புகல்
ஆதி பாதமே, ஓதி உய்ம்மினே.

4 அங்கம் மாதுசேர் பங்கம் ஆயவன்
வெங்குரு மன்னும், எங்கள் ஈசனே.

5. வாள்நிலாச் சடைத் தோணி வண்புரத்(து)
ஆணி நற்பொன்னைக், காணுமின்களே.

6. பாந்தள்ஆர்சடைப், பூந்தராய் மன்னும்
ஏந்து கொங்கையாள் வேந்தன், என்பரே.

7. கரிய கண்டனைச், சிரபுரத்துஉள் எம்
அரசை, நாள்தொறும் பரவி, உய்ம்மினே.

8. நறவம் ஆர் பொழில், புறவ(ம்) நல்பதி
இறைவன் நாமமே, மறவல் நெஞ்சமே.

9 தென்றில் அரக்கனைக், குன்றில் சண்பைமன்
அன்று நெரித்தவா(று), நின்று நினைமினே.

10. அயனும் மாலுமாய், முயலும் காழி யான்
பெயல்வை, எய்திநின்று, இயலும் உள்ளமே.

11 தேரா அமணரைச், சேர்வுஇல் கொச்சை மன்
நேர்இல் கழல் நினைந்து, ஓரும் உள்ளமே.

12. தொழும் மனத்தவர், கழுமலத்து உறை
பழுதுஇல் சம்பந்தன் மொழிகள், பத்துமே.

*குறிப்பு : திரு இருக்குக்குறள் - இரண்டு சீர்களால் ஆக்கப் பெற்றது. இருக்கு மந்திரம் போன்றது. சொல் சுருக்கம் உடையது. எண்ணுவார் எண்ணத்தை ஈடேற்ற வல்லது. இப்பதிகத்தில் சீகாழியின் 12 பெயர்களும் வருகின்றன.*

*1 உள்குவீர் - நினைக்கும் மனம் உடையவர்களே. 2 தாணு - நிலையாக உள்ளவன், சிவபெருமான். 3 நாதன் - தலைவன். புகல் - புகலி. என்பிர்காள் - என்பவர்களே. ஆதி - முதல்வன். 4. அங்கம் - மேனி மாது - உமை. பங்கம் - பாதி 5 வாள் - ஒளி ஆணி - பொன்னை உரையிட்டு அளக்கும் உரையாணி. 6 பாந்தள் - பாம்பு மன்னும் - நிலைத்திருக்கும், 7. கரியகண்டன் - நஞ்சு உண்டதால் கருத்த கழுத்து உடையவன். 8 நறவம்-தேன். மறவல்-மறக்காதே. 9. தென்றில்-பகை, தென்திசையில் உள்ளவன். குன்று - கட்டுமலை. மன் - மன்னன். 10. பெயல் - அருள் மழை. முயலும் - தேட முயற்சிக்கும். இயலும் - இயங்கும், பொருந்தும். 11 நேர்இல் - ஒப்பு இல்லாத. கழல் - திருவடி ஓரும்-தியானிக்கும் 12 பழுது - குற்றம்.*

பிரமன் தனது படைப்புத் தொழில் இடையூறு இன்றி முடிவு பெற வழிபட்டதால் பிரமபுரம் ; இறைவன் மூங்கில் வடிவமாகத் தோன்றிச் சூரபன்மனுக்கு அருள் செய்தமையால் வேணுபுரம் ; சூரனுக்குப் பயந்த தேவர் புகலிடமாகக் கொண்டு பூசித்தமையினால் புகலி; சுக்கிரன், இயமன், வியாழன் என்போர் குருத்துவம் பெறப் பூசித்ததனால் வெங்குரு; பிரளய வெள்ளத்திலும் அழியாது தோணி போல மிதந்து, சிவபிரானும், அம்பிகையும் தங்கியிருக்கப் பெற்றதனால் தோணிபுரம் ; தரையைப் பிளந்து சென்று இரணியாக்கனைக் கொன்ற வராக மூர்த்தி வணங்கியதனால் பூந்தராய்; தலைக்கூறுகிய இராகு இறைஞ்சியதனால் சிரபுரம் ; புருவடிவோடு தன்னைச் சோதிக்க வந்த அக்கினி தேவனால் சிபிச்சக்கரவர்த்தி நற்கதியடைந்தமையால் புறவம் ; சண்பைப் புல்லால் மாய்ந்த தங்குலத்தவரால் வந்த பழி தன்னைத் தொடராதிருக்கும்படி கண்ணபிரான் பூசித்ததால் சண்பை ; இறைவனை எதிர்த்து நடவாதம் புரிந்த காளி அச்சீற்றம் நீங்கப் பணிந்ததனாலும் தன் வலியை அழித்த கண்ணபிரானால் ஏவப்பட்ட காளிங்கன் என்னும் பாம்பு பூசித்ததாலும் ஸ்ரீகாளிபுரம் (சீகாழி); மச்சகந்தி என்னும் பரதவர் குலப்பெண்ணைக் கூடிய பராசரர், கொச்சையாம் பழிச்சொல் நீங்கப் பரவியதனால் கொச்சைவயம்; எங்கும் கழியாத கொடிய மும்மலத் தொகுதியைக் கழுவித் தொலைக்க உரோமச முனிவர் உள்ளுருவித் தொழுததனால் கழுமலம் ; எனப் பெயர்காரணம் சொல்லப்படுகிறது.

*திருச்சிற்றம்பலம்*

## அருணகிரிநாதர் அருளிய திருப்புகழ்

சிந்துற்றுஎழு மாமதிஅங்கித் திரளாலே
தென்றல்தரு வாசமிகுந்துஉற்று எழலாலே
அந்திப்பொழுது ஆகியகங்குல் திரளாலே
அன்புற்றுஎழு பேதைமயங்கித் தனியாளுள்
நந்துஉற்றிடு வாரியை மங்கத் திகழாயே
நஞ்சுஒத்துஒளிர் வேலினைஉந்திப் பொருவேளே
சந்தக்கவிநூலினர் தஞ்சொற்கு இனியோனே
சண்பைப்பதி மேவியகந்தப் பெருமாளே.

## பிழைதிருத்தம்

| வரிசை | பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 1 | 3 | 3 | அன்றுருஅணிக் | அன்றணிக் |
| 2 | 4 | 17 | பொனனடி | பொன்னடி |
| 3 | 7 | 8 | வஞசனை | வஞ்சனை |
| 4 | 7 | 17 | மனமிகக்கொள் | மானமிகக்கொள் |
| 5 | 7 | 24 | எறன்றியும் | என்றறியும் |
| 6 | 7 | 29 | வஞசனை | வஞ்சனை |
| 7 | 8 | 30 | தருமோ | தருமே |
| 8 | 12 | 5 | புணையொடு | பிணையொடு |
| 9 | 13 | 10 | கொள்வீரென | கொள்வீரென் |
| 10 | 13 | 23 | வருந்துமென | வருந்துமென் |
| 11 | 13 | 24 | சமபந்தர் | சம்பந்தர் |
| 12 | 14 | 13 | கண்பெர்ழி | கண்பொழி |
| 13 | 14 | 19 | ஈகையிலாரமனை | ஈகையிலார்மனை |
| 14 | 14 | 25 | ஓவரும் | ஓவரும் |
| 15 | 15 | 7 | செயதல் | செய்தல் |
| 16 | 17 | 3 | பேராடல | பேராடல் |
| 17 | 17 | 20 | இறைவா | இறைவர் |
| 18 | 17 | 22 | நடுங்குமாறுன் | நடுங்குமாறுன் |
| 19 | 17 | 25 | அலமால் | அலமரல் |
| 20 | 17 | 30 | இபபிரபஞ் | இப்பிரபஞ் |
| 21 | 18 | 23 | கோடுத்தருளே | கொடுத்தருளே |
| 22 | 20 | 21 | கடைசியாகள | கடைசியர்கள் |
| 23 | 20 | 26 | பனக் | பனவக் |
| 24 | 21 | 13 | காண்டால் | காண்டரல் |

யான்எனது என்னும் செருக்குஅறுப்பான் வானோர்க்கு
உயர்ந்த உலகம் புகும். *(திருக்குறள்)*




*தொல்காப்பியர் மின் அச்சகம், நூல்கள் வெளியீட்டகம், நெய்வேலி-3.*